# சீவாஜி

27 அக்டோபர் 1957

விலை 7 நயா பைசா


## ஆனந்தம் பாரீர் !



குறைந்த வருமானத் தொகுதியினருக்கு சர்க்காரின் நிதி உதவி பெற்று ஜாகை வசதி செய்து கொடுக்கும் திட்டத்தின் கீழ், பங்களூரில், வசந்த நகரில் நிர்மாணிக்கப்பட்டு வருகிற காலனியில் குழந்தைகள் பூங்காவின் ஒரு தோற்றம்.

சித்தர்கள்

# "திருவள்ளுவர்"

—(கே. ஆர். பசுபதி, அறிவாலயம், கருவூர்)—

5

"நீரின் றமையா துலகெனின் யார் யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு"

எவருக்கும் நீரென்னும் பானம் தேவை! இதுவின்றி உயிர்க்குலம் நடவாது! அந்த அமுரி வானின்றி அமையாது! "வானின்று" என்பின் "கதிரில்லாமல்" என்பதாகும்! சூரியகலையாம் உவர்சத்தினுடைய அலையினுல், உடம்பெனும், பூமி அல்லது பிருதிவி ஊரிக் களிப்படைந்து, உடல் பூராவும் தாரையாக ஒழுகி, சாகாநிலை ஏற்படுவது என்றும், அது சூரிய சக்தியில்லாமல் முடியாது என்றும் சுட்டிக் காட்டுகின்ருர்!

இதையேதான்,

"ஒழுக்கத்து நீத்தார் பெருமை
விழுப்பத்து வேண்டும் பனுவல் துணிவு"

என்ற குறள் சொல்லுகின்றது!

ஒழுக்கத்து— வாசியை அல்லது விந்தை ஒழுகவிடாத புலனடக்கியோரின்

நீத்தார்— நீருனர், அதாவது ஒளியானரின் அல்லது சித்தர்களின்

பெருமை— மகிமையை, மார்க்கத்தையடைய

விழுப்பத்து—பற்றெழித்துவிடவேண்டுமென்பது!

பனுவல்— பெரியோர்களின்வாக்கியம்,

துணிவு— முடிவாகும்,

மேலும்,

"இருமை வகை தெரிந்து ஈண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றிவ்வுலகு"

இருமை= சூரிய, சந்திர கலைகளின் (பிறப்பிறப் பின்)

வகை தெரிந்து—போக்கு வரவுணர்ந்து,

ஈண்டு= இவ்வுடலில்,

அறம்= யோகநெறி, சாகாக்கலையை

பூண்டார்— ஏற்று நடத்துவோரின்

பெருமை— மகிமையால்

இவ்வுலகம்— உடல் (உலகு)

பிறங்கிற்று— விளங்கியது; (ஒளிபெற்றது) பெருமையுறுகின்றது;

ஆகாசத்திலிருந்து தோன்றியபூதங்களின் தன்மையை, சக்தியை உணர்வதே சித்த மார்க்கம் என்ற உண்மையை விளக்குகின்ருர் வள்ளுவர்.

" சுவை ஒளியூ றோசை நாற்ற மென்றைந்தின்
வகைதெரிவான் கட்டே வுலகு "

சுவை = காரம் ; ஒளி = வடிவம் ;

ஊறு = உணர்ச்சி ; ஓசை = ஒலி ;

நாற்றம் = வாசனை ; என்று = எனக் கூறப்பட்ட ; ஐந்தின் வகையும் ;

வான் கட்டே = ஆகாசத்தின் ; வளியின் வடிவ்மே என்று

தெரி = அறிந்து கொள் ; என்கிருர். மேலும், முற் கூறிய ஐந்தையும் தெரிந்தால், உலகெனும் உடல் நிலைக்குமெனவும் பொருள்படும். இதையே அவ்வையார்,

" ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றம்
ஆசைப் படுத்து முலகு " என்கிருர்.

இதுவே, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமென்பதின் கரு !

முன்பு கூறியதுபோல, " பிருதிவியிலிருந்து ஆகாயத்தைப்பார்; ஆகாசத்திலிருந்து சகலத்தையும் பார்" என்பதையே ராமதேவர் என்னும் சித்தர் "பரை ஞான கேசரி" என்னும் நூலில் கீழ் வருமாறு பாடியுள்ளார் ! இவைகளின் தன்மையை உணர்ந்தவரே லோக குருவாவார் ! இந்த ஐம் பூதங்களின், அவைகளின் கருவின்நிலையைக் கண்டவரையே " குருபதங்கண்டவர் " என்றும், ஜகத்குருவெனவும் அழைக்கிருேம் !

பாடலைப் பார்மின்!

" பாரப்பா பிருதிவியை யறியவேணும்
பண்பான அப்பினிடஞ் சேர வேணும்
கூரப்பா தேய்வுதனைக் காணவேணும்
குறிப்பாக வாய்வுதனைக் கொள்ளவேணும்
நேரப்பா யிது நாலு மறிந்து கொண்டு
நேர்மையுடனுகாசம் புக்க வேணும்
பேரப்பா ஆகாசந் தன்னில் நின்று
பிலமான பிருதிவியைப் பேணிப்பாரே. "

( 11-ம் பக்கம் பார்க்க)

# மக்கள் ஜனநாயக ருமேனியாவில்

## கலைஞர்கள், எழுத்தாளர்கள், விஞ்ஞானிகளின் நிலை.

சுமார் எழுபது ஆண்டுகளுக்குமுன், ருமேனியாவின் தலைசிறந்த கவிஞர் மிகைல் எமினஸ்கு அவர்கள், அச்சமயத்தில் ருமேனியாவின் அமைச்சர்களில் ஒருவராகவிருந்த மிதவாதி ஜி. வி. மார்துனுக்குப் பின்வருமாறு கடிதம் எழுதினார்: "........தயவுசெய்து என்னை மறந்துவிடாதீர்கள். அனேகமாக வாழ வழியின்றி அவதியுறும் என்னிடத்தில் கருணை காட்டுங்கள். தாங்கள் எனக்கு உதவிசெய்ய முடியும் என்றால், அந்த உதவி வெகு விரைவில் கிடைக்கும்படிச் செய்யவேண்டும் என்று மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். ஏனெனில் எனது நிலை அவ்வளவு பயங்கரமானதாக உள்ளது."

ஆனால் அன்றைய ஆளும் வட்டாரத்தினர், இந்த ஒப்பற்ற கவிதாமேதைக்கு உதவி செய்ய முன்வரவில்லை. கொடிய வறுமையினால் அலைக்கழிக்கப்பட்ட இவர், நோய்வாய்ப்பட்டு, பராரியான நிலையில், மருத்துவ நிலையம் ஒன்றில் மரணமடைந்தார்.

இத்தகைய பரிதாப முடிவிற்கு ஆளானது இவர் மாத்திரமல்ல. சிறந்த கவிஞர்களும் ஓவியர்களும் இசைவாணர்களும் கலைஞர்களும் கொடிய வறுமையினால் கொல்லப்பட்ட கதை, மிகவும் நீளமானது.

ஆனால் இன்று மக்கள் ஜனநாயக அமைப்பின்கீழ், கலைஞர்களின்—சிருஷ்டி கர்த்தாக்களின்—வாழ்க்கை நிலையும் வேலை நிலைமைகளும் அடியோடு மாறிவிட்டன. கலைக்கும், விஞ்ஞானத்திற்கும் தமது திறமையையும் வாழ்க்கையையும் அர்ப்பணித்துள்ளவர்கள், இன்று நாட்டு மக்கள் அனைவரின் நன்மதிப்பிற்கும் பரந்த அன்பிற்கும் பாத்திரமாக விளங்கி வருகின்றனர்.

கடந்த 13 வருடங்களுக்கு முன் ருமேனியாவில், மிகச் சிறந்த கவிதை நூல்கள் யாவும், 500 முதல் 1000 பிரதிகள்தான் அச்சடிக்கப் பெற்று வந்தன; எந்தப் புத்தகமும் 2000 பிரதிகளை எட்டிப் பிடிப்பது மிகவும் அரிதாக இருந்தது. தலைசிறந்த நவீனங்கள் 3000 பிரதிகளைவிட உயர்ந்ததில்லை. 15 அல்லது 20 முறை ஒரு நாடகம் நடத்தப்பட்டால், அது மிகப்பெரிய வெற்றியாகக் கருதப்பட்டது.

பொதுமக்களின் கலாச்சார நிலை உயர்த்தப்பட்டுள்ளதன் விளைவாக, இன்று ருமேனிய மக்கள் குடியரசில், கவிதை நூல்களும் சரி, வசன நூல்களும் சரி, 6000 முதல் 10,000 பிரதிகள் வரை அச்சிடப்படுவது சர்வ சாதாரணமாகியுள்ளது. இதேபோல் ஏராளமான நாடகங்கள் "நூறாவது நாள்" கொண்டாடுவதும் சகஜமாகியுள்ளது.

எழுத்தாளர்களின் உரிமைகளைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் பதிப்புரிமை சம்பந்தமாக ஒரு புதிய சட்டம் பிறப்பிக்கப்பட்டுள்ளது. மேலும், சமீபத்தில் வெளியிடப்பட்டுள்ள முடிவின்படி, எழுத்தாளர்கள், இசைவாணர்கள், ஓவியர்கள், சிற்பிகள் ஆகியோர்களுடைய கலைப் படைப்புகளுக்கு அளிக்கப்படும் தொகைகள் உயர்த்தப்பட்டுள்ளன.

ருமேனியக் கலைஞர்களின் வேலை நிலைமைகளும் வாழ்க்கை நிலைமைகளும் மிகச் சிறந்தவையாக விளங்குகின்றன என்று கூறும்போது, மேற்கூறியவற்றை மாத்திரம் நாம் குறிப்பிடவில்லை.

"இலக்கிய நிதி", "இசை நிதி", "சிற்பநிதி" என்று பல ஸ்தாபனங்கள் நிறுவப்பட்டுள்ளன. இவை யாவும் கலைஞர்களின் பொருளாதாரப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்குப் பேருதவி புரிந்து வருகின்றன. இந்த நிதிகள் மூலம் ஆசிரியர்களின் பதிப்புரிமை பாதுகாக்கப்படுகிறது. தேவைப்படும் அனைவருக்கும் கடன் வழங்குவதற்கும் பொருளாதார உதவி அளிப்பதற்கும் இவை பயன்படுத்தப்படுகின்றன. மேலும், வயதான அல்லது உழைக்கும் சக்தி இழந்த எழுத்தாளர்கள், இசைவாணர்கள், ஓவியர்கள், சிற்பிகள் ஆகியோருக்குப் பென்ஷன் வழங்குவதற்கும், மற்றபடி அவசியமான சமயங்களில் கலைஞர்களுக்கு வேண்டிய உதவியை அளிப்பதற்கும் இவை பயன்படுகின்றன. இதல்லாமல், எழுத்தாளர்களும் கலைஞர்களும் உள்நாட்டிலோ, அயல் நாடுகளிலோ சுற்றுப் பிரயாணம் செய்வதற்கு வேண்டிய உதவியும் இந்த நிதிகளிலிருந்து வழங்கப்படுகிறது. மேலும் கலைஞர்களுக்கான ஓய்வு இல்லங்கள், ஆரோக்கிய விடுதிகள், படைப்பு இல்லங்கள் ஆகியவையும் இந்த நிதிகளின் மூலமே நிர்வகிக்கப்படுகின்றன.

உதாரணமாக "இலக்கிய நிதி"யை எடுத்துக் கொள்வோம். இந்நிதியிலிருந்து 1409—1956 ஆண்டுகளில், 3900 நபர்களுக்கு சுமார் 50 லட்சம் லீ வரையில் கடன் வழங்கப்பட்டுள்ளது; 1500 எழுத்தாளர்களின் பிரயாணச் செலவுகளுக்காக 12 லட்சம் லீ செலவிடப்பட்டுள்ளது; வயோதிகப் பென்ஷன்கள் வழங்குவதற்காக 50 லட்சம் லீ ஒதுக்கப்பட்டது. இவ்வாறு இலக்கிய நிதியிலிருந்து அதன் உறுப்பினர்கள் ஒவ்வொருவருக்கும் ஆண்டொன்றிற்கு சராசரி சுமார் 9000 லீ வரையில் வழங்கப்பட்டு வருகிறது.

எழுத்தாளர்கள், கவிஞர்கள், சிற்பிகள், இசைவாணர்கள், இலக்கிய—கலை விமர்சகர்கள்—இவர்கள் யாவருக்கும் பிரத்யேகமான படைப்பு இல்லங்கள் உள்ளன. இங்கு அவர்கள் பல வாரங்கள் அல்லது மாதங்கள்கூட நிம்மதியாகத் தங்கியிருந்து, அவர்களுடைய படைப்புப் பணிக்கு எவ்வித இடையூறுமின்றி முழு கவனம் செலுத்தலாம். இத்தகைய படைப்பு இல்லங்கள், சினையாவிலுள்ள முன்னாள் அரசரின் பெலிசர் மாளிகையிலும், இயற்கை வனப்பு மிக்க கருங்கடற் கரையிலுள்ள பால்செஸ்டி, வேலீவினுலி ஆகிய ஆரோக்கிய ஸ்தலங்களிலும், பிரஹோவா பள்ளத்தாக்கிலும் நிறுவப்பட்டுள்ளன. சீக்கிரமே அச்சேறப் போகும் கையெழுத்துப் பிரதிகளைத் திருத்திக்கொண்டுள்ள எழுத்தாளர்களையும், இசை வானில் பவனி வரவிருக்கும் பாட்டுகளுக்கு மெருகு கொடுத்துக் கொண்டுள்ள இசைவாணர்களையும் இந்தப் படைப்பு இல்லங்களில் எல்லாக் காலத்திலும் காணலாம். பிளோரீஸ்கா ஏரிக்கரையி

(10-ம் பக்கம் பார்க்க)

# 'கர்னாடக சங்கீதம்'

பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி.

தென்னிந்தியா நாட்டிய சாஸ்திர ரீதியில் நடனத்திலும் சங்கீதத்திலும் மிக்க திறமை பெற்றுவிளங்குகிறது. பல்வேறு வகையான நடனங்களிலும் வாத்திய இசை, வாய்ப்பாட்டு ஆகியவை உட்பட சங்கீதத்திலும் அது சிறந்து நிற்கிறது.

கர்னாடக சங்கீதம் புராதன சங்கீதத்துடன் நேரடியாக, தொடர்பு விடாத முறையில் இணைந்திருக்கிறது. வெளிநாட்டு சார்பால் அது நசிந்துவிடவில்லை. இந்த சங்கீதத்தை விருத்தி செய்வதில் வீணைக்கு முக்கிய ஸ்தானம் இருக்கிறது. இதர வாத்திய இசையும் அதேபோல் முக்கியத்துவம் உள்ளது. 22 சுருதிகளையும் இதர நுட்ப சுருதிகளையும் கமகங்களையும் கையாண்டு இசை எழுப்புவதில் வைணிக சம்பிரதாயத்தைக் காணலாம். தென்னிந்தியாவின் பிரபல சங்கீத கர்த்தாக்கள் எல்லாரும் வெறும் வாய்ப்பாட்டு நிபுணர்களாக மாத்திரமல்லாமல் வீணையில் திறமையுள்ளவராகவும் விளங்கினார்கள். தற்போதைய கர்னாடக சங்கீதம் பழைய சங்கீத விற்பன்னர்கள், சாகித்திய கர்த்தாக்கள், சங்கீத வித்வான்கள் ஆகியோரின் கூட்டான, திரண்ட சங்கீத ஞானத்தின் சிறந்த சாதனையாகும்.

### ஆதி கால குறிப்புகள்.

தென்னிந்தியாவில் சங்கீதம் மக்களின் வாழ்க்கையோடு ஒன்றியுள்ள ஒரு அம்சமாகும். இறைவனை நாதப் பிரம்மமாகப் பாவிக்கும் கருத்து இங்கே வேரூன்றியிருக்கிறது. இது பற்றிய மிகப் புராதன குறிப்பு தேவாரத்தில் (கி. பி. 7-ம் நூற்றாண்டு) காணப்படுகிறது.

சங்கீதத்தைப் பொறுத்த மட்டில் தென்னிந்தியா இந்தியாவின் இதர பகுதிகளை எல்லாம் விட வளம் மிக்கது. சமஸ்தானங்கள், ஜமீன்தாரிகள், மடங்கள், கோயில்கள் ஆகியவையெல்லாம் பணம் கொடுத்து சங்கீத நிபுணர்களை அமர்த்தியிருந்தன. தஞ்சாவூர் சமஸ்தானத்தில் 360 வித்வான்கள் இருந்தார்கள்' ஒவ்வொரு வித்வானும் வருஷத்தில் ஒரு நாள் தான் மன்னர் சமூகத்தில் பாடுவார். அதற்காக வருஷம் முழுவதும் அவர் சாதகம் செய்வார்.

தென்னிந்தியக் கோயில்களில் உள்ள சிற்பங்களில் அந்தந்தக் கால வாத்தியக் கருவிகள் காணப்படுகின்றன. அவைகளை இசைக்கும் விதமும் அச்சிற்பங்களிலிருந்து தெரியவருகின்றன. கோவில் வித்வான்கள் பாடுகிற அல்லது வாத்தியங்களில் வாசிக்கிற சடங்கு பூர்வமான சங்கீதம் அந்தக் கால சங்கீதத்தை இன்றும் நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

### சங்கீதத் தூண்கள்.

மதுரை, திருநெல்வேலி, ஆழ்வார்திருநகரி, களக்காடு, சுசீந்திரம், திருவனந்தபுரம், திருப்பதி, தாத்பத்திரி, லேபாக்ஷி, ஹம்பி ஆகிய ஊர் கோயில்களில் கல்லால் செய்யப்பட்ட நாதம் எழுப்பும் தூண்கள் உள்ளன. செண்பகராமநல்லூரில் கல் தூணைக் குடைந்து அந்தக் குழாயில் இசை எழும்படி செய்திருக்கிறார்கள். அது சிற்பத்திறமைக்கும் சங்கீதத்திறமைக்கும் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. அந்தத் தூண்கள் சங்கீத வாத்தியங்களுக்கு ஒத்து சுருதி இசைப்பதற்கு உபயோகிக்கப்பட்டன. பிரதர்ஸன ஸ்தம்பங்கள் துவி குணத்துவ ஒலிகளை எழுப்பும். குடுமியாமலைக் கல்வெட்டுக்கள் (கி. பி. 7-ம் நூற்றாண்டு) சங்கீதத்தை அடையாளமிட்டு காட்டுவதற்காக அந்தக் காலத்திலேயே சிறந்த குறியீட்டு முறை இருந்ததைக் காட்டுகின்றன. திருக்கோடிகாவல் கோபுரத்தில் உள்ள சிற்பங்களில் வெற்றியுடன் திரும்பிவரும் ஒரு படை சங்கீத, நடன கோலாகலத்துடன் எப்படி வரவேற்கப்படுகிறது என்பது காட்டப்பட்டிருக்கிறது. தென்னிந்தியாவிலேயே இத்தகைய சிற்பம் இது ஒன்றுதான்; இது மிக அபூர்வமான ஒரு சிற்பமாகும்.

சர்வ வாத்தியம் என்பது தென்னிந்தியாவுக்கே சிறப்பான ஒரு அம்சமாகும். கடவுளை வாய்ப்பாட்டு, வாத்திய இசை, நடனம் ஆகிய மூன்று வழிகளிலும் வணங்குவதற்கு அது வழிசெய்கிறது. இந்த நிகழ்ச்சி சுமார் 4 மணி நேரம் நீடிக்கும். அதைக் கண்டு, கேட்டுக் களிப்பவர்கள் வாய்ப்பாட்டையும் வாத்திய இசையையும் பல ரக நாட்டியங்களையும் கேட்கவும் பார்க்கவும் செய்யலாம். பல்வேறு விதமான வாத்தியக் கருவிகள் தனியாகவும் சேர்த்தும் இசைக்கப்படும். சர்வ வாத்தியக் கச்சேரி கல்வி போதனையாகவும், பொழுது போக்காகவும் ஆத்மீக அனுபவமாகவும் விளங்குகிறது.

### நடனச் சிற்பக் கலை.

தென்னிந்தியக் கோயில்களில் எல்லாம் ஆண் அல்லது பெண் நடன உருவங்கள் சிற்பங்களில் இருக்கும். அவையில்லாத கோயில்களே இல்லை. சிதம்பரம் கோபுரத்தில் காணப்படுகிற நடன சிற்பங்கள் நம் மூதாதையர்களின் கலை ஞானத்துக்கும் திறமைக்கும் எடுத்துக்காட்டாக விளங்கி வருகின்றன.

தென்னிந்தியா தர்க்க சாஸ்திரத்திற்குப் பேர்போனது. இதை சங்கீத சாஸ்திர அமைப்பிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். கர்னாடக சங்கீதத்தின் சுத்த ஸ்வரங்கள் ரி, க, ம, த, னி என்னும் சுரங்களின் கீழ் மட்டஸ்தாயி ஸ்வரங்களாகும். இதர ஸ்வரங்கள் எல்லாம் விக்ருத ஸ்வரங்களாகும். 72 மேளகர்த்தா அமைப்பு முறை கலையுணர்ச்சியும், தர்க்க சாஸ்திர அறிவும் சேர்ந்த அடிப்படையில் உருவானதாகும். ரத்னாகரத்தில் மிஸ்ர மேளங்கள் சூசகமாகக் குறிப்பிடப்பட்டுள்ளபடியால் 12 ஸ்வர ஸ்தானங்களுக்கும் வெவ்வேறு மிஸ்ர மேளங்கள் கணக்கிடப்பட்டு மொத்தம் (72×72) 5184 மிஸ்ர மேளங்கள் கணிக்கப்பட்டுள்ளன. சுத்த மிஸ்ர மேள அமைப்பு முறை மிகவும் சவிஸ்தாரமான கணக்கான படியால் உலகத்தில் எந்தப் பகுதியிலும் எந்த நிபுணரும் அமைக்கிற எந்த ஸ்வரத் திட்டமும் இதில் அடங்கிவிடும். மேனாட்டு (மெலோடிக் மைனர் ஸ்கேல்) இந்தத் திட்டத்தின் 1604-வது மேளமாகும்.

72 மேள கர்த்தாக்களிலிருந்து உருவாக்கப்படக் கூடிய ஜன்னியராகங்கள் எண்ணிக்கைக்கணக்குக்கு 1,27,008 ஆகும்.

### தாள முறை

தாள முறையும் மிக விரிவாகவும் சவிஸ்தாரமாகவும் உருவாக்கப்பட்டிருக்கிறது. ஷட் அங்கங்களும், சோடச அங்கங்களும் இங்கே கையாளப்படுகின்றன. தாள தசப் பிராண கொள்கையானது லய வின்னியாச ஆராய்ச்சியில் எல்லை கட்டி நிற்கிறது.

(9-ம் பக்கம் பார்க்க)

தொடர்

# எங்கிருந்தோ வந்தான்

## பேச்சாளர்.

### 1

மேடைக்குப் பேச்சாளர் வந்தார்.

டாம்பீகமற்ற தூய ஆடை அவர் அணிந்திருந்தார்.

அவரது பரந்த நெற்றி அறிவு விசாலத்தையும் அதில் படிந்திருந்த ரேகைகள் அனுபவத்தையும் எடுத்துக் காட்டின.

கூடியிருந்தோர்களுக்கு அஞ்சலியும், நல்வாழ்த்தும் கூறி தன் கருத்தை அவர் விளக்கத் தொடங்கினர்.

அவரது பேச்சு இனிமையான நாதத்தில் தட்டுத் தடுமாற்றமின்றி, நிதானமாக, அனுபவ வெளியீடாக அமைந்திருந்தது.

சொற்கள் அவரது கருத்தைத் தாங்கிக் கேட்பவர்களின் உள்ளத்தில் வந்து தங்கின.

கூடியிருந்தோர் அனைவருடைய உள்ளமும் அவரது பேச்சு மகுடியின் நாதத்தில், அது கொண்டுவரும் கருத்தில் ஈடுபட்டிருந்தது.

கூட்டத்தில் அமைதி. அத்தனை உள்ளமும் எதையோபெறத் துடித்து நிற்கும் வேகத்தில் ஒரே நிலையில் இயங்கிக் கொண்டிருந்தன.

பேச்சாளர் சொன்னர். மேதைகளும் மேன்மக்களும் பிறந்தது இந்த பாரத நாடு.

இந்த நாட்டில் தோன்றிய ஞானச் செல்வர்கள் காட்டிய. கருத்துக்கள் அனைத்திற்கும் விளக்கமாக விளங்கிய ஞானக் கொழுந்து பாரதி.

எங்கிருந்தோ இங்கு வந்து எம்முடன் வாழ்ந்து, இந்தப் பிறவியில் பெறுதற்கரிய பேறும் ஞானச் செல்வமும் பெற்ற பெருந்தகை அந்த மேலோன்.

அவன் வாழும் மனிதர்களுக்கு வழிகாட்டி. வற்ருத ஞான ஊற்று. ஊருக்குழைத்த யோகி. உண்மையைக் கண்ட கவி. உயிர்களுக்காகத் தவமிருந்த தவசி.

உயிர் குலம் மேன்மையுற, அவன் சொன்னக் கருத்துக்கள் பற்பல. அதற்கு அவன் காட்டிய விளக்கம் அனந்தம்.

அவைகளில் ஒன்று.

மனிதா கேள்! மகனே கேள்! உண்மை உணரத் துடிக்கும் உயிர்க் குலமே கேள்!

தீய சக்திகளுக்கு நடுவில் நான் ஒருவன் மட்டும் நல்லவனுக, நேர்மையுடையவனுக, அன்புடையவனுக எப்படி வாழ்வது? வாழ முடியும் என்று தியங்காதே, மயங்காதே, கலங்காதே, நீயும் தீயவனுக மாறிவிடாதே.



## அமுத வாக்கு.

சாதிக் கொடுமைகள் வேண்டாம் ;—அன்பு
தன்னில் செழித்திடும் வையம் ;
ஆதரவுற்றிங்கு வாழ்வோம் ;—தொழில்
ஆயிரம் மாண்புறச் செய்வோம்.

புகை நடுவிலே தீயிருப்பது போல, குளத்திலே தாமரை உதிப்பதுபோல, தீய சக்திகளுக்கிடையேதான் நல்ல சக்தியும் தோன்ற வேண்டியிருக்கிறது.

தோன்றும் நல்ல சக்தி, தன்னையும் தான் உதித்த இடத்தையும் பெருமைக்குரியதாக செய்வதுபோல தீய சக்திகளுக்கு நடுவே தோன்றி அதனை மாற்றும் வலிமையும் நல்ல சக்திகளுக்குண்டு.

உன் வரையிலே உயிர்களிடத்து அன்பு பூண்டு உன்னை விடத் தாழ்ந்தவர்கள், பலஹீனர்கள் இவர்களுக்கு ஒருக்காலும் தீமை நினையாமல், தீயது செய்யாமல் வாழ்வாயானுல் உன் வரையில் கலியொழிந்து கிருதயுகம் தோன்றும்.

வாழ்வின் பயன் பெறுவாய் வாழ்வாங்கு வாழ்வாய் என்றான் அந்த எல்லாம் தெரிந்த எங்கிருந்தோ வந்த இணையற்ற மேதை.

அவன் வாக்கை நினைத்து, அதன் வழிநடந்து, சிந்தித்து செயல் புரிந்து தேவ வாழ்வு வாழ்வீர்களாக!

வணக்கம் என்றுகூறி பேச்சை முடித்தார் அந்த பேச்சாளர்.



ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒலி 22] 27–10–57 [ வாரம் 47


# பனிரண்டு வயது

புதிய உலகின் வயது பனிரண்டு ஆகிறது. அதாவது உலக நாடுகள் ஒன்றுபட்டுத்தான் வாழ்ந்தாக வேண்டுமென்ற உயர்ந்த கொள்கையில் தோன்றிய ஐக்யநாடுகள் சபையைப் பற்றிக் குறிப்பிடுகிறோம்.

விஞ்ஞான வளர்ச்சியும், புதிய புதிய ஆயுத உற்பத்தியும் சேர்ந்து உலகத்தின் பரப்பை மிகவும் குறுக்கி விட்டது போலவே இதன் ஆயுளையும் குறைத்து விடுமோ என்ற அச்சம் சென்ற உலகப்போரின் விளைவாக உண்டாயிற்று. ஹிரோஷிமா நகரின் அணுகுண்டு வீச்சு உலக மக்களின் சிந்தனையில் ஒரு அதிர்ச்சியை உண்டாக்கியது.

முதல் மகாயுத்தத்தின் விளைவாகத் தோன்றிய சர்வதேசச் சங்கம் வெறும் கூட்டமாக முடிந்து விட்டது போல் அல்லாமல் உண்மையாகவே உலக நாடுகளை ஒன்று திரட்ட வேண்டுமென்ற ஆர்வம் இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் அதிகமாயிற்று. கடந்த பன்னிரண்டாண்டுகளில் ஐக்கிய நாடுகள் சபை இந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகப் பல நடவடிக்கைகள் மேற்கொண்டு வந்துள்ளது. இரண்டொரு நெருக்கடிகளின் போது இந்த ஸ்தாபனம் தலையிட்டுத் தடுத்துமிருக்கிறது. என்றாலும் அகில உலக ஒற்றுமையை நிலைநாட்டும் துறையில் இந்த ஸ்தாபனம் அணு அளவும் முன்னேற்றமடைந்து விடவில்லை. இந்த ஸ்தாபனத்தில் அங்கம் வகித்து வரும் நாடுகளுக்கு இடையில் ஏற்பட்டுள்ள பல் வேறு சிக்கல்களைத் தீர்க்காமல் நீடித்துக் கொண்டே போவதன் மூலம் அங்கம் வகிக்கும் நாடுகளே ஒற்றுமைப்பட முடியாமல் இருந்து வருகிறது. மக்கள் சீனாவுக்கு இன்னமும் இதில் இடங்கொடாமல் இருந்து வருவதன் மூலம் சபையின் எல்லைக்கு வெளியே உலகின் ஒரு பெரிய பரப்பு துண்டாக நின்று விட்டது.

அணு சக்தி ஆயுதங்களில் போட்டி மனப்பான்மை குறையாமல் வளர்ந்து வளர்ந்து, ருஷியச் செயற்கைச் சந்திரன் வானமண்டலத்தில் எல்லையற்ற வேகத்தில் சுழன்று வந்துகொண்டிருக்கும் நிலையில் உலக சமாதானம், அமைதி என்பன வெல்லாம் வெறும் ஏட்டுச்சுரைக் காய் என்ற நிலை வந்து கொண்டிருக்கிறது ருஷ்யாவைப் பார்த்துப் பொருமைப்படவும், அதை வெல்லும் முயற்சியில் ஈடுபடவுமே ஏனைய வல்லரசுகளுக்கு இப்போது முழுக் கவலையும் இருக்கிறது

இந்த நிலையில் விஞ்ஞான சாதனைகளைக் கொண்டு அழிக்கும் கருவிகளைப்பெருக்கும் வேகம் உலகில் தணியும் சாதனையைத் தவிர ஐக்ய நாடுகளின் ஸ்தாபனம் செய்தாக வேண்டிய வேலை வேறில்லை. இத்திசையில் பெறுகின்ற வெற்றியே இனி ஐ. நா. வின் வாழ்வாக இருக்கும்.

# டேப்ரிக்கார்டிங் மூலம் பாடம்

லூயிஸியானுவில் நியூ ஆர்லியன்ஸிற்கு 36 மைல் வடக்கே ஒரு சிறிய நகரில் விசேஷ பள்ளிக்கூடம் ஒன்று இருக்கிறது. இதில் கையாளப்படும் கற்பிக்கும் முறைகள், பொது மக்கள் கல்விக்கு விசேஷமாக பயன் அளிக்கக் கூடியவை எனக் கருதப்படுகின்றன. ஸெயின்ட் ஸ்கொலாஸ்டிகா கழகத்தில், எட்டு ஏகரா நிலப் பரப்பில் தேசத்தின் முதலாவது எலெக்டிரானிக் பள்ளிக்கூடம் இருக்கிறது. சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும், அவர்களுடைய பாடங்கள் டேப் ரிக்கார்டிங் மூலம் இந்தப் பள்ளிக்கூடத்தில் போதிக்கப்படுகின்றன.

லூயிஸியானுவிலுள்ள கோவிங்டன் பெனெடிக்டின் கன்யாஸ்திரீகள் இப் பள்ளிக்கூடத்தை நடத்துகின்றனர். போர்ட் நிதி ஸ்தாபனம் இதற்கு பண உதவி செய்கிறது. இப் பள்ளியின் ஆசிரியர் குழாத்தில் வெகு சில ஆசிரியர்கள் தான் இருக்கின்றனர். இவர்களைக் கொண்டு டேப் ரிக்கார்டிங் மூலம் சிறந்த முறையில் கல்வி கற்பிக்க பள்ளிக்கூடம் முயற்சிக்கிறது.

கல்வி கற்பிக்க எலெக்டிரானிக் சாதனங்கள் ஆசிரியர்களுக்குச் சாதாரணமானவையே ஆனால் இவற்றை கல்வி போதனைத் திட்டத்திற்கு ஒரு அடிப்படையான, நிரந்தர அங்கமாக உபயோகிப்பது புதிதாகும். எதிர்காலத்தில் ஏராளமான மாணவர்களுக்குக் கல்வி போதிக்கும் பிரச்னை அமெரிக்காவுக்கு ஏற்பட்டுள்ளதை கவனிக்கையில் இந்த புதிய முறை மிக அதிகமாக உபயோகிப்பதற்குச் சந்தர்ப்பமேற்படலாம்.

கோவிங்டன் கழகத்தின் வேலையில் முக்கிய பொறுப்பு ஏற்றுக் கொண்டிருப்பவர் சகோதரி (கன்யாஸ்திரீ) மேரி தெரிஸா ஆவார். இந்தப் பொறுப்பை அவர் ஒன்பது ஆண்டுகளுக்கு முன் ஏற்கையில், அவரிடம் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் விஷயத்தில் தனிப்பட்ட கவனம் செலுத்த வேண்டுமென்றும், வகுப்புகளில் அதிகமாக மாணவர்கள் இருத்தல் கூடாதென்றும், கேட்டுக்கொண்டனர்.

சகோதரி தெரிசாவுக்கு அதிகப்படி ஆசிரியர்களை எடுத்துக்கொள்ள வழியில்லை. அதனால் இருக்கும் ஆசிரியர்களை திறம்பட பயன்படுத்திக் கொள்வதற்கு வழிகளைக் கண்டுபிடிக்க வேண்டியதாயிற்று. இதன் விளைவாக ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால், டேப் ரிக்கார்டு போதனை முறையைப் பற்றி பரிசீலனை செய்ய ஆரம்பித்தார். இந்த பரிசீலனையின் பயனாக ஒரே ஒரு ஆசிரியர் ஏக காலத்தில் பல வகுப்புகள் நடத்துவதும் அதே சமயத்தில், தேவையானபோது மாணவர்களுக்குத் தனித் தனியாகச் சொல்லிக் கொடுப்பதும் சாத்யம் எனக் கண்டு கொள்ளப்பட்டது.

எலெக்டிரானிக் முறை மிகவும் பயனளிப்பதாகும் எனக் கண்டு கொள்ளப்பட்டது. ஆனால் இதை விரிவாகப் பயன்படுத்த தேவையான சாதனங்கள் பொருத்தக்கூடிய புது கட்டிடம் ஒன்று தேவையாக இருந்தது. இந்தக் கட்டடத்தில்தான் புதிய படிப்புச் சொல்லிக் கொடுக்கும் முறைகளில் போர்ட் நிதி ஸ்தாபனம் அக்கரை காட்டியது. இந்த எலெக்டிரானிக் முறையை விரிவாகப் பயன்படுத்த வாக்களித்ததுடன், கட்டிடம் கட்டு

வதற்குரிய செலவையும் ஏற்றுக்கொள்ள முன் வந்தது.

இன்று இந்த புதிய பள்ளிக்கூடத்தைப் பார்ப்பவர்களுக்கு பெரும் திகைப்பு ஏற்படுவதில் ஆச்சரியமில்லை. மூன்று பிரதான அறைகள் உள்ள இந்தப் பள்ளிக்கூடம் ரேடியோ ஸ்டுடியோ மாதிரி இருக்கிறது. பள்ளிக்கூடம் எப்படி செயல் படுகிறதென்று விளக்கினலன்றி யாரும் இதைப் புரிந்து கொள்ள முடியாது.

படிப்புச்சொல்லிக் கொடுக்கும் ஆசிரியை கம்பீரமான ஒரு ஆசனத்தில் அமருகிறர். டேப் ரிக்கார்டுகள், பொத்தான்கள், டயல்கள், ஸ்விட்சுகள் மூலம் அவர் தமது பாடங்களை தொடங்குகிறர். பாடம் சொல்லுவதை டேப் ரிக்கார்டிங் நடத்திக் கொண்டிருக்கையிலேயே கரும்பலகையில் படம் போட்டுக் காண்பிக்கவோ, அல்லது வேறு வகையில் விளக்கவோ, அல்லது தனி மாணவர் ஒருவருக்கு உதவி செய்யவோ ஆசிரியை தமது ஆசனத்தை விட்டு எழுந்து செல்வார். ஆனல், டேப் ரிக்கார்டிங் மூலம் பாடம் சொல்லிக் கொண்டிருப்பது தடையின்றி நடைபெற்றுக்கொண்டிருக்கும்.

"மாணவர்களிடம் தனித் தனியாக கவனம் செலுத்தும் முறையைக் காட்டும் பூர்வாங்கத் திட்டமே இது" என்ற சகோதரி தெரிஸா பள்ளிக்கூடத்தைப் பார்வையிட வருபவர்களிடம் கூறுகிறர். நான்கு வெவ்வேறு டேப்புகள், வெவ்வேறு நிலையில் பாடபோதனையை ஏக காலத்தில் நடத்துகிறது. மந்த புத்தியுள்ள மாணவர்கள், சாதாரன புத்தியுள்ள மாணவர்கள், சற்று புத்திசாலித்தனமான மாணவர்கள் ஆகியோர் அவரவர்களுடைய திறமைக்குத் தக்கபடி போதிக்கப்படுவர். இந்த இனங்களில் ஏதாவது ஒன்றிலிருந்து நான்காவது கோஷ்டியை அமைக்கலாம். இதுதான் முதலாவது முறை.

இரண்டாவது முறைதான் கல்விக்கு மிகச் சிறந்த சேவையை அளிக்கிறது. ஆசிரியை ஒரு கோஷ்டிக்கு பாடம் சொல்லிக்கொண்டிருக்கையிலேயே, இன்னெரு கோஷ்டியை கண்காணிப்பதற்கு இந்த முறை அனுமதிக்கிறது. இது அவருடைய படிப்புச் சொல்லிக் கொடுக்கும் அளவை இரட்டிப்பு அல்லது மூன்று பங்கு ஆக்குகிறது.

இந்த டேப் மூலம் பாடம் சொல்லிக் கொடுக்கும் சகோதரி தெரிஸாவின் முறையானது ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் ஒருங்கே பயனளிப்பதாகவிருக்கிறது. மாணவர்கள் எப்படி படிக்கின்றனர் என்பதை ஆசிரியர்கள் காணவும் இது சந்தர்ப்பமளிக்கிறது. ஏனெனில் தம்முடைய குரலை மாணவர்கள் கேட்கையில் அவர்களுடைய உணர்ச்சி எவ்விதம் இருக்கிறதென்பதை அறிய ஆசிரியைக்கு அவகாசம் இருக்கிறது என்கிறர் சகோதரி தெரெஸா.

டேப் மூலம் படிப்புச் சொல்லிக்கொடுப்பதில், ஆசிரியைகளிடம் அதிகபட்ச திறமை அவசியம் என சகோதரி தெரிஸா கூறுகிறர்.

———

## "தீர சேவை விருது"

மணிப்பூர் ரைபிள் படையைச் சேர்ந்த ரைபிள்மான் ஸ்ரீ இந்திரா பகதூர் சேத்திரிக்கு ராஷ்டிரபதியின் போலீஸ்—தீ அணைப்புப் படை தீர சேவை பதக்கமும், அலிகார் போலீஸ் சூப்பரின்டென்டன்ட் ஸ்ரீ ஜோரிமால் ஜெய்ன் ஐ. பி எஸ்.-க்கு தீர சேவைக்கான போலீஸ் பதக்கமும் ராஷ்டிரபதியால் வழங்கப்பட்டிருக்கின்றன. இது சம்பந்தமான அறிவிப்பு ஒன்று இந்தியா கெஜெட்டில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

ரைம்பிள்மான் சேத்திரி ஏப்ரல் 7-ந் தேதி நாகா மலைக்குன்றுப் பிரதேசத்தில் எதிரிகளின் தாக்குதலிலிருந்த போலீஸ் ஸ்டேஷன் ஒன்றைக் காத்து நின்று எதிரிகளைப் போராடி விரட்டியபோது உயிர் இழந்தார்.

ஸ்ரீ ஜெய்ன், பிரபல கொள்ளைக்காரரான ஷேர் ஸிங், ஜெங்காலி ஆகியோர் ஆயுத பாணிகளாகக் கூடியிருந்த ஓர் இடத்தைத் தாக்கி அவர்களை வெளியே விரட்டி இறுதியில் அவர்களைப் போலீஸ் கோஷ்டி சுட்டுக் கொல்வது வரையில் தமது உயிருக்கு ஆபத்து ஏற்படும் நிலையில் எதிரிகளுக்கு இலக்காக இருந்துக்கொண்டே நடவடிக்கைகளை நடத்தினர். கொள்ளைக்காரர்களில் நால்வர் கொல்லப்பட்டன, மீதி பேர் சரணடைந்தார்கள். துப்பாக்கிகளும், வெடி மருந்துகளும் கைப்பற்றப்பட்டன.

———

## கிராம சேவையாளருக்கு மோட்டார் சைக்கிள் பரிசு

தேசத்தில் உள்ள சமுதாய அபிவிருத்தித் தொகுதிகளிலே வேலை செய்கிற மிகச் சிறந்த கிராம சேவையாளருக்கு, பிரதம மந்திரியால் சமுதாய அபிவிருத்தி மந்திராலயத்துக்கு வழங்கப்பட்டுள்ள ஒரு மோட்டார் சைக்கிள் ஜெர்மன் சமஷ்டி குடியரசால் பிரதம மந்திரிக்கு அன்பளிப்பாகத் தரப்பட்ட "சுண்டப் காம்பினெட்" ரக மோட்டார் சைக்கிளாகும். இந்தப் பரிசைப் பெறுவதற்கு 1958–59 நிதி வருஷத்தில் போட்டி நடத்தப்படும். அந்தப் போட்டியில் சகல ஆண், பெண் கிராம சேவையாளர்களும் கலந்துகொள்ளலாம். பெயரளவில எட்டண போட்டிக் கட்டணம் உண்டு.

மிகச் சிறந்த கிராம சேவையாளர் தொகுதி விஸ்தரிப்பு அதிகாரியாகப் பதவி உயர்வு அளிக்கப்படுவதற்குக் கவனிக்கப்படுவார். ராஜ்ய, ஜில்லா ஸ்தானங்களிலும் இதேபோல் சிறந்த கிராம சேவையாளருக்குப் பரிசுகள் வழங்கப்படும். ஜில்லா ஸ்தானப் போட்டியில் ஜெயிப்பவருக்கு சைக்கிள் பரிசு கிடைக்கும். போட்டிக்கட்டண வசூலிலிருந்து வேறு பரிசுகளை வழங்கவும் யோசிக்கப்பட்டு வருகிறது. உணவு உற்பத்தி, கால்நடை வளர்ப்பு, கிராமத் தொழில்கள், கூட்டுறவு முதலிய பொருளாதார நடவடிக்கை அம்சங்கள் போட்டி வேலைத் திட்டங்களாக இருக்கும். அந்தந்த ராஜ்ய அபிவிருத்திக் கமிஷனர்கள் அது பற்றி நிர்ணயிப்பார்கள்.

———

## யுத்த ஞாபகார்த்த சின்னம்

சென்ற உலக யுத்த காலத்தில் மரணமடைந்த இந்திய ராணுவத்தைச் சேர்ந்த 25,000 வீரர்கள், விமானப் படையைச் சேர்ந்த 700 வீரர்கள் ஆகியோரின் நினைவு அடையாளமாக டில்லியில் அமைக்கப்பட்டுள்ள ஞாபகார்த்தச் சின்னத்தை 1957 நவம்பர் 14-ந் தேதி ராஷ்டிரபதி திறந்து வைப்பார். அந்த வைபவத்துக்கு சாம்ராஜ்ய யுத்த சமாதிகள் கமிஷன் சார்பில் ரைட் ஆனரபல் ஸர் பாட்ரிக் ஸ்பென்ஸ் (முன்னைய இந்திய பிரதம நீதிபதி) வருவார்.

சென்ற உலக யுத்தத்தில் போர் அரங்கங்கள் அல்லாத பிரதேசங்களிலோ அல்லது சமாதான கால தளங்களிலோ அல்லது ரஜாவில் தங்கள் வீடுகளுக்கு வந்திருக்கும் போதோ மரணமடைந்த இந்திய ராணுவ வீரர்கள், விமானப் படைவீரர்கள் ஆகியோரின் ஞாபகார்த்தமாக இச் சின்னம் அமைக்கப்பட்டிருக்கிறது. பெரும்பாலோர் விஷயங்களில் சடலங்கள் அவர்களின் சகாக்களாலோ குடும்பத்தினராலோ அந்தந்த மதசம்பிரதாயங்கள்படி அடக்கம் செய்யப்பட்டு அல்லது ஈமக்கிரியை செய்யப்பட்டுள்ளன.

**பென்ஷன், வைத்திய, வசதி**

பென்ஷன், ரஜா, வைத்திய வசதிகள் சம்பந்தமாக சமீபத்தில் மத்திய சர்க்கார் அளித்துள்ள சலுகைகள் மூலம் சுமார் 9 லட்சம் 4-வது வகுப்புச் சிப்பந்திகள் பயனடைந்துள்ளனர். மத்திய சர்க்கார் சிப்பந்திகளின் மொத்த எண்ணிக்கையில் பாதிக்கு மேல் 4-வது வகுப்புச் சிப்பந்திகள் உள்ளனர். அவர்களுக்கு அனுமதிக்கப்படுகிற பென்ஷன், கிராட்யுட்டி விகிதங்களும், மத்திய சர்க்கார் சிப்பந்திகளின் இதர வகுப்புகளுக்கு அனுமதிக்கப்படுகிற அதே அளவுக்குக் கொண்டு வரப்பட்டுள்ளன. எல்லா வகுப்பு சர்க்கார் சிப்பந்திகளுக்கும் ஒரே மாதிரியான வைத்திய உதவி கிடைக்கும்படி செய்வதற்காக, வைத்திய வசதிகள் சம்பந்தமான விதிகள் திருத்தப்பட்டுள்ளன. மூன்ருவது வகுப்பு 4-வது வகுப்புச் சிப்பந்திகளுக்கிடையே ரஜா விஷயத்தில் இருந்துவந்த தாரதம்மியமும் இப்போது அகற்றப்பட்டிருக்கிறது.

# தீபாவளி நினைவுகள்!

பரதேசி

—

“வடநாட்டான் பண்டிகையைத் தமிழர்களாகிய நாம் கொண்டாடலாமா?— அண்டப் புளுகனைப்போல் சண்டை (டை) பிரசண்டம் செய்யும் வாணங்களை **விலை கொடுத்து** வாங்கிக் கொளுத்துவது அறிவுடைமையா?” என்கிற வாதமெல்லாம் தோன்றாத காலத்து நினைவு இன்னமும் என் நெஞ்சில் பளிச்சிடுகிறது.

வெங்காயவெடி இன்று வெங்காய உணவின் மூலம் தான் அமலிலிருக்கிறது. உண்மையிலேயே அன்று வெங்காயவெடி உண்டு. சிவப்பு நிறத்திலிருக்கும் அந்த (க்கலப்படமுண்டோ என்னவோ?) பொடியைப் பெரியவர்கள் வாங்கி வருவார்கள். காகிதத்தில் சிறு பொட்டணங்களாக மடித்துச் சமையலறையிலிருந்து இரும்பு உலக்கையை இரவல் வாங்கி வாசல் திண்ணைகளின் இடையில் வீட்டுக்குள் செல்லும் வழியில் முதலில் போட்டிருக்கும் கருங்கற்படியில் வைத்து மேலேயிருந்தபடி உலக்கையில் இடிப்பார்கள். வீடே அதிர்ந்து விழுந்து விடுமளவுக்குச் சப்தம் காதைத் துளைக்கும். (முதுகுளத்தூரில் இந்த வாண வேடிக்கைகளை முன்கூட்டியே செய்து காட்டியிருக்கிறார்கள்! அரசியலில் தீபாவளி உண்டு என்பதோ அல்லது ஜாதி மத வெறியிலும் அது உண்டு என்பதோ நிரூபணமாகிவிட்டது) அடடா! இந்த வீடுகளில் திண்ணை என்பது இல்லாமல்போய்விட்டதே! இரண்டு திண்ணைகள் இருந்தாலல்லவா அதனிடையே ஒரு நடைபாதை வழியைக் கண்டுபிடிக்கலாம் என்று மனம் ஏங்குகிறது.

அப்போதெல்லாம் சீனவெடிகள் அசல் சீன தேசத்து வெடிகளாகவே இருந்து வந்தன. இப்போதோ அவை சுதேசி ஜனநாயக வெடிகளாகிவிட்டன! ஆகையால் சொந்த நாட்டில் தொழில்வளம் பெருகவும் சிவகாசி மக்கள் உயிர் வாழவும் நாம் வாண வேடிக்கைகள் செய்யத்தான் வேண்டும்.

தீபாவளிக்கென்று புதுப் புது ஆடைகளை மக்கள் வாங்கி அணிவதால் ஜனநாயகசோஷலிஸ பாணி வெற்றி பெறுகிறது. நிதி படைத்தவர்கள் தங்கள் பிடியைத் தளர்த்திச் செலவிடுகிறார்கள். அது இல்லாதவர்கள் எதையாவது அடகு வைத்துப் பணம் வாங்கிச் செலவழிக்கிறார்கள். செல்வாக்குள்ள இரண்டுங்கெட்டான் பிரமுகர்கள் கடனுக்கே ஜவுளி வகையறா வாங்கி ஒரு வருஷம் வரைக்கும் தீபாவளியை நினைவில் வைத்துக் கொண்டாட வகை செய்துகொள்கிறார்கள்- எப்படியானாலும் எல்லோரும் இந்நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களை வாங்கி உபயோகிக்கிறார்கள். அதாவது மீண்டும் அந்தப் பொருள்கள் உற்பத்தியாக வழி வகை செய்கிறார்கள். அவர்கள் வாழ்க! அவர்கள் சோஷலிஸ பாணி அடியோடு வாழ்க!!

சமீபத்தில் அயல் நாட்டுப் பொருள்கள் பல நம் நாட்டில் (நேரிடையாக ஒழுங்கான முறையில்) இறக்குமதியாகத் தடை விதிக்கப்பட்டிருக்கும் செய்தியைப் படித்தேன். உண்மையில் இதைப் பாராட்ட எத்தனைப் பக்கங்கள் எழுதினாலும் போதாது! முக்யமாகச் செயற்கைச் சந்திரனை இங்கே இறக்குமதிசெய்யமாட்டார்களல்லவா? என்று எனக்குச் சந்தோஷம்? செயற்கைச் சந்திரனுக்குள் நரகாசுரன் இருப்பதாக யாரோ ஒரு பெரியவர் சொல்லக்கேட்டேன். அவர் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர் என்கிற விபரம் தெரியாததால் அவர் சொன்னதை நம்பலாமா நம்பக்கூடாதா என்று முடிவு செய்ய முடியவில்லை. ஆனால் செயற்கைச் சந்திரன் இந்த இந்திய மண்ணில் இறங்கினால் நீங்களெல்லாம் என்மீது கோபம் கொள்ளுவீர்கள்!.... அதாவது அந்தச் செயற்கைச்சந்திரனுக்குள் நல்ல பொழுதுபோக்கு சாதனமாக என் “பத்திரிகை” என்ற பத்திரிகை நடைபெற்றுவருகிறது. ஒரு உதவியாசிரியரும் எட்டு அச்சுக் கோப்பவர்களும் ஒரு (ட்ரெடில்) அச்சிடுபவரும் அதனுள் இருக்கிறார்கள். ராமநாதபுரம் கலகத்தைப் பற்றிய ரகசியங்களெல்லாம் அந்தப் பத்திரிகையில் வெளிவந்திருப்பதால் செயற்கைச் சந்திரனை இந்த மண்ணில் இறங்க விடாமலிருப்பதுதான் நல்லது!.

ஒவ்வொரு வருஷமும் “போன வருஷத் தீபாவளிபோல் இந்த வருஷம் தீபாவளி வியாபாரம் அவ்வளவு சுவாரஸ்யமாயில்லை!” என்ற கருத்து வியாபாரிகள் சார்பில் வெளியிடப் பெறுவது வழக்கம். காரணம் மேன்மேலும் இந்தப் பண்டிகையைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டும் என்று அவர்கள் விரும்புவதுதான். பொது மக்கள் நிலை நேர் மாறானது. பொது மக்கள் முன்னைவிட இப்போதுதான் தீபாவளியை நல்ல முறையில் கொண்டாடுகிறார்கள். பண்டிகை கொண்டாடும் மரபில் தமிழர்களின் உணர்ச்சி எப்படி இருந்தாலும் செயல் என்னவோ சாதகமாகவே இருந்து வருகிறது. எப்படி இருந்தாலும் குழந்தைகளுக்கும் மனைவிக்கும் புத்தாடைகள் வாங்கத்தான் போகிறோம்; அதை இந்த சந்தர்ப்பத்திலேயே வாங்கிக் கொடுத்து விடுவோமே என்று (நரகாசுர அனுதாபி உள்பட) எல்லோருமே நினைக்கிறார்கள். சுறுசுறுப்புடன் இரவு பகலுமாகத் துணியலங்காரத் தொழிலாளர்கள் (தையற்காரர்கள் என்று சொன்னால் கோபிக்கலாமல்லவா?) செயல் புரிந்து பொருளீட்டவாய்ப் பளிக்கிறார்கள். காசைக்கரியாக்குவது முட்டாள் தனம்— படுமுட்டாள்த்தனம் என்று அழுத்தந்திருத்தமாகச் சொல்கிறவர்கள்கூட கட்டுகட்டாக மத்தாப்பு மற்றும் பட்டாசு வகைகளைக் குழந்தைகளுக்காக வாங்கிச் செல்கிறார்கள். மத்தாப்பின் ஒளியைக் கண்டு மலரும் குழந்தைகளின் (இயற்கைச் சந்திரன் போன்ற?) முகத்தைக் காணக் கொடுத்துவைக்கும் வள்ளல்கள் வாழ்க! வாழ்க!!

முதுகுளத்தூரில் வாண வேடிக்கைகள் செய்துமுடித்துவிட்டதால் தயவுசெய்து அனுதாபம் காட்டும் முறையில் வாணங்களை விலைகொடுத்து வாங்கி உபயோகிக்காதீர்கள் என்ற அறிக்கையொன்றைப் படித்தேன். முதுகுளத்தூர் சம்பவத்துக்காகச் சிவகாசியைப்பழிவாங்க நினைக்கும் “பகிஷ்கரிப்பு” இயக்கமோ இது என்ற சந்தேகம் ஏற்பட அது இடம் கொடுத்தது. இனி தயாரிக்கும் வாணங்களை வேண்டுமானால் அபாயகரமில்லாதவைகளாகத் தயாரிக்கலாம்—(அதற்கு ஊக்கமளிக்க வேண்டும்) ஆனால் தயாராகிவிட்ட வாணங்களை என்ன செய்வது? வாங்கிக்கொளுத்தினால்தான் அவைகளைத் தயாரிக்கும் பணியை வயிற்றுப் பிழைப்பாகக் கொண்ட தொழிலாளர் மக்கள் உயிர் வாழமுடியும்?

திடீரென்று எனக்கொரு நினைவு வருவதன் காரணமாகத் தயவுசெய்து இந்தக் கட்டுரையை அடுத்த வருஷம் முடிக்க அனுமதிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த நினைவு என்ன என்பதைத் தயவு செய்து கேட்காமலிருக்கும்படியும் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்!

———

## பொம்மைத் தொழில்

அகில இந்திய கைவேலை போர்டு சிபாரிசுப்படி இந்திய சர்க்கார் பொம்மைத் தயாரிப்பு, ஆகிய விளையாட்டுப் பொருள்கள் தயாரிப்பு, அலங்கார வேலை மன்பாண்டங்கள் தயாரிப்பு, தொழில்களின் அபிவிருத்திக்கான திட்டங்களுக்கு அங்கீகாரமளித்திருக்கிறார்கள். அவைகளின்படி பல பயிற்சி - உற்பத்தி நிலையங்கள் ஏற்படும். ஏற்கனவேயுள்ள முன்னேற்டத் திட்டங்கள் நீடித்து நடத்தப்படும். இத்திட்டங்களை நடத்தும் பொருட்டு அந்தப் போர்டுக்கும் ராஜ்ய சர்க்கார்களுக்கும் மத்திய சர்க்கார் கடனாகவும் மானியமாகவும் 4 லட்சம் ரூபாய் அனுமதித்திருக்கிறார்கள்.

———

(4-ம் பக்கம் தொடர்ச்சி)

கலைச் சங்கீதம், தெய்வப் பாடல், நடன இசை, நாட்டுப் பாடல், வீரப் பாடல் முதலிய பல இசைத் தொகுப்புக்கள் இருக்கின்றன. ராமசுவாமி தீக்ஷிதர் இயற்றியுள்ள (1735—1817) 108 ராக தாள மாலிகை; மகா வைத்தியநாதய்யர் (1844—1893) இயற்றியுள்ள 72 மேள ராக மாலிகையும் உலகத்தில் எங்குமே காணப்படாத இரண்டு நீண்ட உருப்படிகளாகும். பிரகலாத பக்தி விஜயம், நௌக்க சரித்திரம் (தியாகராஜர்), பல்லக்கி சேவா பிரபந்தம் (ஷஹாஜி மஹாராஜா), நந்தனர் சரித்திரம் (கோபால கிருஷ்ண பாரதி) ஆகிய இசை நாடகங்கள் மிக நீண்ட இசை நிகழ்ச்சிகளாகும். தென்னிந்திய சங்கீதத்தில் சாகித்தியம் ராகத்தைத் தாங்குவதற்கான வெறும் ஆதார அமைப்பு மாத்திரமல்ல; கருத்தழகும் இலக்கியச் சிறப்பும் சேர்ந்து விளங்கும் அரிய கவிதைகளாகும்.

தென்னிந்தியாவில் எத்தனையோ சாகித்ய கர்த்தாக்கள் தோன்றியுள்ளார்கள். தேவாரம், திவ்வியப் பிரபந்தம், திருப்புகழ் ஆசிரியர்கள் பல்லாயிரக்கணக்கான பக்திப் பாடல்களை இயற்றியுள்ளார்கள். புரந்தர தாசர் 4,75,000 பாடல்களை இயற்றியதாகக் கூறியிருக்கிறார். க்ஷேத்திரய்யா 4,100 பதங்களை இயற்றியிருக்கிறார். தியாகராஜர் (1767—1847) வித விதமான எத்தனையோ கிருதிகளை ஆக்கியுள்ளார். ஆயிரம் கிருதிகள் தவிர சதராக ரத்தினமாலிகா, கீர்த்தன சதகம், திவ்வியநாம கீர்த்தனங்கள், உற்சவ சம்பிராதாய கீர்த்தனங்கள், மூன்று இசை நாடகங்கள் (ஆப்ரா) ஆகியவைகளை அவர் இயற்றியிருக்கிறார். போதேந்திர சத்குரு சுவாமி காலத்திலிருந்து பஜனை இயக்கம் தென்னிந்தியாவில் பரவி இருக்கிறது. வெய்யிகீத வைதாள குருமூர்த்தி சாஸ்திரி 100 கீதங்களை இயற்றியதாகக் கூறப்படுகிறது.

சாதாரண மக்களுக்கு மத சம்பந்தமான இலக்கியங்களைப் போதிப்பதற்காக சங்கீத உபன்யாசங்கள் நடத்தப்படும். கதா காலட்சேபம் இவைகளில் மிகச் சிறந்தவை. வில்லுப்பாட்டு, லாவணிப் பாட்டு, கைச் சிலம்புப் பாட்டு முதலியவைகளும் பழக்கத்திலுள்ளன.

## இசை நாடகங்கள்

மிலட்டூர் வெங்கடராமசாஸ்திரி மிகச் சிறந்த இசை நாடகங்களை எழுதியிருக்கிறார். தஞ்சாவூர் ஜில்லாவில் 300 வருஷங்களுக்குமேலாக இசை நாடகங்கள் நடத்தப்பட்டு வருகின்றன, பரதர் தம் நாட்டிய சாஸ்திரத்தில் கூறியுள்ள இசை நாடக லக்ஷணங்களை அவை சிறிதும் பிசகாமல் பிரதிபலிக்கின்றன. ஒவ்வொரு கிராமமும் ஒரு நாடகப் பாத்திரத்தை தந்து உதவ வேண்டும் என்று ஏற்பட்டிருந்த சட்டுப்பாடு காரணமாய் இசை நாடகம் மறையாமல் பாதுகாக்கப்பட்டு வந்திருக்கிறது. குறிப்பிட்ட சில குடும்பத்தார் குறிப்பிட்ட சில பாத்திரங்களாக நடிப்பதற்கு உரிமை பெற்றிருந்தார்கள்.

முகக் கீதங்கள், பாத்திர ஜதி, பாத்திர வாத்தியம், பாத்திர கீதம் முதலியவை இசை நாடக பாத்திரங்களோடு சம்பந்தப்பட்டவை. இசை நாடக ஆரம்பத்திலும் முடிவிலும் பாடப்படுகிற முக ஜதி, அந்திய ஜதி, வர்ண தரு, சம்வாத தரு, உத்தர—பிரதி உத்தர தரு, பாத்திர பிரவேச தரு, சுவாகத தரு ஆகியவையெல்லாம் காதுக்கும் கண்ணுக்கும் அருவிருந்தாகும். சமஸ்கிருதத்தில் நாராயண தீர்த்தர் இயற்றிய கிருஷ்ண லீலா தரங்கினி தான் மிக நீண்ட இசை நாடகமாகும்.

## பரிபூரணத்தில் உச்சம்

தென்னிந்தியாவில் வாத்திய சங்கீதம் பரிபூரணத்தின் உச்ச நிலையை அடைந்துவிட்டது. ஸ்வரக் கோவைகளை மூன்று ஸ்தாயியிலும் ஆயிரம் தடவை வாசிக்கிற வெய்யி சாதகம் முறை. பந்த தானம், சக்கர பந்தம் முதலிய வேலை முறைகள் முதலியவை சங்கீத ஆராய்ச்சியாளர்களுக்கு அக்கறையுள்ள அம்சங்களாகும்.

தென்னிந்தியாவில் கிராமிய சங்கீதம், நடனம், நாடகம், வாத்திய இசை முதலியவை வளம் பெற்று விளங்குகின்றன. பண்படாத கிராமீய பாடல்களும் நன்கு பண்பட்ட பாடல்களும் உள்ளன. கல்யாணப் பாட்டுக்கள் ரசமான ஆராய்ச்சிக்குரிய அம்சமாகும்.

கர்னடக சங்கீதம் ஒரே ஸ்வரக் கோவையுள்ள அமைப்பாகும். பொதுவாக அங்கீகரிக்கப்பட்ட ராக லக்ஷணம் அதில் இருக்கிறது. வட இந்திய சங்கீதத்துக்குள்ள சில பிரச்னைகள் இதில் இல்லை. சாஸ்திரீய சங்கீதம் வெகுவாகப் பாராட்டப்படுகிறது. பொதுவாக மக்கள் சங்கீதத்தில் நல்ல பரிச்சயம் உள்ளவர்கள்; நல்ல சங்கீதத்தைக் கேட்க விரும்புகிறவர்கள்.

———

## பூதானம், கிராமதானம் பற்றிய கிராம ரேடியோ அறிவிப்பு.

பூதான, கிராமதான நடவடிக்கை அம்சங்களை அகில இந்திய ரேடியோவின் திருச்சி நிலைய கிராம ஒலிபரப்பு நிகழ்ச்சிகளில் அதிக முக்கியத்துவம் கொடுத்து ஒலிபரப்ப வேண்டும் என்று திருச்சி ரேடியோ நிலையத்தில் கூடிய கிராம நிகழ்ச்சி ஆலோசனைக் கமிட்டி யோசனை கூறியது. சென்ற மூன்று மாத காலத்தில் அந்நிலையத்தில் ஒலிபரப்பப்பட்ட கிராம நிகழ்ச்சிகளை அக்கமிட்டி பரிசீலனை செய்தது; அடுத்த கால் வருஷத்துக்கான திட்டங்கள் பற்றியும் அது விவாதித்தது.

கமிட்டியின் அங்கத்தினர் ஸ்ரீ எஸ். ரங்கராமானுஜம் நாயுடு, சென்னை சர்க்கார் கிராம க்ஷேமநல டைரெக்டர் ஸ்ரீ ஜி. வெங்கடாசலபதி, ஐந்தாண்டு திட்ட தென் பிராந்திய பிரசார அதிகாரி ஸ்ரீ ஜே. தங்கவேல், ஜில்லா விவசாய அதிகாரி ஸ்ரீ எஸ். பி. ராமச்சந்திரன், திருச்சி கள பிரசார அதிகாரி ஸ்ரீ டி. ஏ. தனபாண்டியன் ஆகியோர் அக்கூட்டத்தில் கலந்து கொண்டனர். திருச்சி ரேடியோ நிலைய நிர்வாகி ஸ்ரீ பி. ஸி. ஈஸ்வர்தாஸ் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார்.

பூதான, கிராமதான ஆகியவை பற்றி அடிக்கடி அரங்குகள் நடத்த ஏற்பாடுசெய்வது இவ்வியக்கங்களின் வளர்ச்சிக்கு உதவிகரமாயிருக்கும் என்று கருதப்பட்டது, இந்த அரங்குகளில் உத்தியோக, உத்தியோகச் சார்பற்ற முக்கியஸ்தர்கள் பங்கெடுத்துக் கொள்ளவேண்டும்,

இந்த பிராந்தியத்தில் உள்ள பல்வேறு தொகுதிகளில் அபிவிருத்தி நடவடிக்கைகள் பற்றி தொகுதி ஆலோசனைக் கமிட்டிகளின் முக்கியமான உத்தியோகச் சார்பற்ற அங்கத்தினர்களுடன் சாத்தியமான அளவுக்கு அடிக்கடி பேட்டிகள் நடத்தப்படவேண்டும் என்றும், கோஷ்டி விவாதங்கள் நடத்தப்படவேண்டும்என்றும் கமிட்டி சிபாரிசு செய்தது; கோஷ்டி விழாக்களில் தொகுதி அபிவிருத்தி அதிகாரிகளும் ஆலோசனைக்கமிட்டி அங்கத்தினர்களும் பங்கெடுத்துக் கொள்ளவேண்டும்.

வில்லுப்பாட்டு, லாவணி, கரக ஆட்டம், சாக்கைக்கூடத்து காவடியாட்டம் முதலிய கிராமிய கலைகளை மக்களிடையே பிரபலப்படுத்துவதற்கு திருச்சி நிலையம் மேற்கொண்டு வருகிற முயற்சிகளைக் கமிட்டி பாராட்டியது. கிராமிய கலை விழாக்களுக்கு ஏற்பாடு செய்து அந்நிகழ்ச்சிகளை நேயர்களின் முன்னிலையில் நடத்தி ஒலிபரப்ப ஏற்பாடு செய்யப்பட்டதை கமிட்டி விசேஷமாய் பாராட்டியது.

———

(3-ம் பக்கம் தொடர்ச்சி)

லுள்ள வனப்புமிக்க புகாரஸ்ட் ஜில்லாக்களில் ஒன்றில், 18 கலைக்கூடங்களை அரசாங்கம் நிறுவியது. சமீபத்தில் நிறுவப்பட்ட இவை யாவும் ஓவியர்கள், சிற்பிகளின் உபயோகத்திற்காக ஒதுக்கப்பட்டன. இதேபோல் சமீபத்தில் 46 ஓவியர்களும் சிற்பிகளும் சொந்தமாக வீடும் கலைக்கூடமும் நிர்மாணித்துக்கொள்வதற்காக நிலம் வழங்கப்பட்டது. 1950-ல் சிற்பிகள் நிதியிலிருந்து ஒரு பெரிய தொழிற்சாலை நிறுவப்பட்டது. 18 இலாக்காக்களையுடைய இந்தத் தொழிற்சாலையில் சகல வகை வர்ணப் பூச்சுகளும் சிற்பங்கள் செய்வதற்கான பிளாஸ்டிலினையும் சலவைக் கற்களும் மற்றும் பல கருவிகளும் உற்பத்தி செய்யப்பட்டு, மிகுந்த மலிவான விலையில் விற்கப்படுகின்றன.

விஞ்ஞானிகளுக்கும் இதே போல் நல்ல வேலைநிலைமைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆராய்ச்சி அறிஞர்களின் உபயோகத்திற்காக நவீன சாதனங்கள் யாவற்றையும் பெற்றுள்ள ஆய்வுக்கூடங்களும், பெரிய நூல் நிலையங்களும் உள்ளன. இதில் ருமேனிய மக்கள் குடியரசின் விஞ்ஞானப் பேரவை நூல் நிலையமும் பல்கலைக் கழக நூல் நிலையமும் குறிப்பிடத் தக்கவை. இங்கு எல்லா நாடுகளையும் சேர்ந்த புதிய வெளியீடுகளையும் புத்தகங்களையும் காணலாம். ஆராய்ச்சி அறிஞர்களின் படைப்புகள் விசேஷப் பத்திரிகைகளிலும் சஞ்சிகைகளிலும் பிரசுரிக்கப்படுகின்றன. விஞ்ஞானிகளுக்கு வயோதிக காலத்தில் மாதம் ஒன்றிற்கு 2000 லீ பென்ஷன் அளிக்கப்படுகிறது.

கலைஞர்களும் விஞ்ஞானிகளும் பல்வேறு விஷயங்களை அறிந்து அனுபவம் பெறுவதற்காகவும், தமது பணிக்கு வேண்டிய பொருள்களை சேகரிப்பதற்காகவும், வெளிநாடுகளுக்குச் செல்வதற்கும், பல்வேறு மகாநாடுகளில் கலந்து கொள்வதற்கும் பல வாய்ப்புகள் உள்ளன. ருமேனிய எழுத்தாளர்களும் கலைஞர்களும் விஞ்ஞானிகளும் கடந்த சில மாதங்களில் பாரிஸ், டோக்கியோ, ஸ்டாக்ஹோம், டில்லி, மாஸ்கோ, வெனிஸ், பீகிங், டொரோன்டோ, ஜகார்டா, மோன்டிவிடியோ முதலிய நகரங்களில் நடைபெற்ற பல்வேறு கலை நிகழ்ச்சிகளுக்கும் விஞ்ஞான மகாநாடுகளுக்கும் விஜயம் செய்தனர்.

ஓய்வு நேரங்களில் எழுத்தாளர்களும் கலைஞர்களும் விஞ்ஞானிகளும் அவரவர்களுக்குரிய கலாச்சார மாளிகைகளில் சந்தித்து அளவளாவுகின்றனர். புகாரெஸ்டில் காலியா விக்டோரியிலுள்ள எழில்மிக்கக் கட்டிடம் ஒன்றில் எழுத்தாளர்களின் மாளிகை அமைந்துள்ளது. இதில் 20,000 புத்தகங்களையுடைய நூல் நிலையமும், சிற்றுண்டிசாலையும், விழா மண்டபமும் உள்ளன. இங்கு அமைக்கப்படும் இலக்கியக் குழுக்களில் எழுத்தாளர்கள் அவர்களுடைய படைப்புகளை மற்றவர்களிடம் படித்துக் காட்டுகின்றனர்; மற்றும், அவர்களுடைய துறை சம்பந்தமான பல்வேறு பிரச்னைகளையும் விவாதிக்கின்றனர். இதல்லாமல் எழுத்தாளர்கள் மாளிகையில் திரைப்படக் காட்சிகளும் இசை விருந்துகளும் சொற்பொழிவுகளும் அடிக்கடி நடத்தப்படுகின்றன.

விஞ்ஞானிகளின் மாளிகையும் தலைநகரின் முக்கிய பகுதியில் அமைந்துள்ளது. ருமேனியாவின் தலைசிறந்த ஓவியர்களான கிரிகோரஸ்கு, லூச்சியன், கோர்னிலியு பாமா ஆகியோரின் அமர சிருஷ்டிகளால் அலங்கரிக்கப்பட்டுள்ள இம்மாளிகையின் மண்டபங்களில், புகழ்வாய்ந்த பௌதீக, மருத்துவ, இரசாயன விஞ்ஞானிகளும் கணித வல்லுநர்களும், பூகர்ப்ப விஞ்ஞானிகளும் பன்மொழிப் புலவர்களும் ஒருவரை ஒருவர் சந்தித்து மகிழ்கின்றனர். இங்கு இவர்கள், வெளிநாட்டிலிருந்து வந்துள்ள புகழ்வாய்ந்த பாடகரின் இசை விருந்துபற்றி அளவளாவிப் பேசுவர், அல்லது அடிக்கடி நடத்தப்படும் கலைக் கணகாட்சிகளைக் கண்டு இன்புறுவர், அல்லது நண்பர்களுடனும் சகாக்களுடனும் விருந்துண்டு மகிழ்வர்.

முன்பு அக்காலத்தில் கவிஞர் திலகம் எமினசும், ஈடிணையற்ற எழில் ஓவியங்களைப் படைத்த லூச்சியனும், மற்றும்பலகலைஞர்களும் வறுமையிலே வாடி வறுமையிலேயே மடிந்தனர். ஆனால் இன்று திறமைக்கு மதிப்பும் கௌரவமும் அளிக்கப்படுகிறது; கலைஞர்களை மக்கள் பேரன்புடன் ஆதரித்து வருகின்றனர். மக்கள் அள்ளி அள்ளி வழங்கும் இந்த அளவிலா அன்பிற்குப் பிரதியாக, கலைஞர்களும் விஞ்ஞானிகளும் எழுத்தாளர்களும் இன்றைய மக்களின் தேவைகளைப் பூர்த்திசெய்யவல்ல விலைமதிப்பிடற்கரிய விஞ்ஞான, கலைப் படைப்புகளை சிருஷ்டித்து வருகின்றனர்.

---

## பெல்ஜிய சர்க்காரின் உபகாரச் சம்பளம்.

சுரங்க வேலை, உலோக வேலை, ரசாயன எஞ்சினீயரிங், கப்பல் நிர்மாணக் கலை ஆகிய விஷயங்களில் ஏதாவதொன்றில் பட்ட பிற்காலப் படிப்பிற்காக, ஒரு இந்திய பிரஜைக்கு 1957—58-ம் வருஷத்திற்கு உபகாரச் சம்பளம் அளிக்க பெல்ஜிய சர்க்கார் முன்வந்திருக்கிறார்கள்.

இந்த உபகாரச்சம்பளத்தின் மதிப்பு மாதம் ஒன்றுக்கு சுமார் 5,050 பெல்ஜியன் பிராங்குகளாகும் (481 ரூபாய்) எட்டு மாதத்திற்கான இந்த உபகாரச் சம்பளம் ஒரு வருஷம் வரை நீட்டிக்கப்படலாம். பெல்ஜியத்திற்குப் போகவர டூரிஸ்ட் வகுப்பு அல்லது 2வது வகுப்புக் கப்பல் கட்டணமும் தரப்படும்.

இதற்கு மனுச் செய்பவர்கள், சுரங்க வேலை, உலோக வேலை, ரசாயன எஞ்சினீயரிங் கப்பல் நிர்மாணக் கலை ஆகிய துறைகளில் ஏதாவதொன்றில் முதல் வகுப்பில் தேறிப் பட்டம் பெற்றிருக்கவேண்டும். மேலும், மூன்று வருஷம் ஆசிரியராக வேலை பார்த்த அனுபவமோ, நடைமுறை அனுபவமோ அல்லது ஆராய்ச்சி அனுபவமோ இருக்க வேண்டும். அவர்கள் 35 வயதுக்கு மேற்பட்டிருக்கக் கூடாது.

குறிப்பிட்ட விண்ணப்ப நமூனக்களும், மற்றுமுள்ள தகவல்களும், கல்வி—விஞ்ஞான ஆராய்ச்சி மந்திராலயம், உபகாரச் சம்பளப் பிரிவு (பகுதி. எஸ் 18), புதுடில்லி என்ற விலாசத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

மனுக்கள் கிடைக்கவேண்டிய கடைசித் தேதி 1957, நவம்பர் 25 ஆகும்.

(2-ம் பக்கம் தொடர்ச்சி)

இதே யுண்மைகளை மேலும் விளக்குகிறார் யூகி முனிவர்; ஐந்து பூதங்களுண்மையையும், விரிவையும் ஆராய்ந்து சொல்கிறார். அது முற்கூறிய குறளுக்கு விளக்கமான பாங் கிலமைந்துள்ளது காணலாம்!

"நிகழ்ந்த சீர்ப்பிருதிவியு மப்பு தானும்
நேரான தேயுவோடு வாய்வுமாகும்
அகழ்ந்த வாகாயத்தோடு ஐந்துபூதம்
அரிதான பிருதிவி மண்ணுமாகும்
தகழ்ந்த வப்பு சலமாகும் நெருப்பும் தேயு
தாக்கான வாயு காற்றுமாகும்
இகழ்ந்த வாகாயமது சத்தமாகும்!
ஏற்ற பிருதிவி பொன்னிறமதாமே!

மேலும் ராமதேவரின் கருத்துக்களைக் காண்க!

அப்பு அல்லது தண்ணீரின் நிறம் பளிங்கு. அக்னி அல்லது தேயுவின் நிறம் சிவப்பு. வாயுவின் நிறம் கறுப்பு; ஆகாயத்தின் நிறம் கார்மேகப் புகைநிறம் என்றும், பிருதிவியின் நிறம் பொன்னிறமென்று வண்ணங் கூறுகிறார்.

இவற்றிற்குத் தெய்வமும் கூறுகிறார். பிருதிவிக்கு பிரம்மா! ஆதாரம் சுவாதிஷ்டானம் அல்லது கருவாய்! இதற்கு கருவெழுத்து "ந"! இந்த பீடத்துக்கு ஆறு இதழ்! இதன் உடற் கூறு மயிர், நரம்பு, தசை, தோல், எலும்பாம்!

அப்புக்கு விஷ்ணு தெய்வம். பீடம்மணிபூரகம் அல்லது நாபிக்கமலம்! பிறைபோல பத்திதழ்கள்! கருவெழுத்து "ம"! இதன் உடற்கூறு உதிரமும், சீயும், மூளையும், மச்சையுமாம்'

"தேயு" — ருத்திரன் - முக்கோண வீடு - பனிரண்டிதழ் — கருவெழுத்து "சி". இதன் பண்பும். கூறும்ஆவது என்னவெனில், ஆகாரமெடுத்தல், துஞ்சல், போகம், பயம், சோம்பலாம்.

"வாயு" — மகேசன் - பதினாறுஇதழ் - அல்லது சோடசஇதழ் — விசுத்தி அல்ல கழுத்து — கருவெழுத்து "வ"! இதன் கூறு — ஆடல், ஓடல். இருத்தல், நிற்றல், உளத்தல்; அறுகோணம்!

ஆகாசம் அல்லது வானம் — இது ஆக்கினை ஸ்தானம்; புருவமையம்; இரண்டிதழ் - தெய்வம் சதாசிவம்; கருவெழுத்து"ய"! காம, குரோத, லோப, மோக, மத, மார்ச்சரியமாகும்; இந்த ஐம்பூதங்களின் கருவெழுத்துக்களைக் கூட்டிப் படித்தால் "நமசிவய" வெனும் ஐந்தெழுத்துப்படி கிடைக்கின்றது.

இந்த உண்மைகளையே, உயிரெழுத்தின் உவரையே, முற்கூறிய சுவை யொளியெனத் தொடங்கும் குறள் உள்ளடக்கி நிற்கின்றது! வள்ளுவரின் கோட்பாடு சாசாக்கல் வியென்பதைக் குறள்களில் சிலவற்றை எடுத்துத் தொட்டுக் காட்டப்பட்டுள்ளது, மேலும் ஆராய்வோர் ஆராய்க!

வள்ளுவர் பாலவர்க்கத்தைச் சார்ந்தவர், தலைவர் அகத்தியர்!

" அண்ட பிண்ட நிறைந்து நின்ற வயன் மால் போற்றி
யகண்ட பரிபூரணத்தி னருளைப் போற்றி
மண்டலஞ்சூ ழிரவிமதி சுடரைப் போற்றி
மதுரதமி ழோதுமகத் தியனைப் போற்றி
எண்டிசையும் புகழு மெந்தன் குருவைப் போற்றி
யிடைகலை பின்கலை சுழி முனையின் கமலம் போற்றி
குண்டலிக்கு ளமர்ந்தவிநாய கனைப் போற்றி
குகனடியின் தாளிணையைப் போற்றி;
" நிலவு பொழி யிரவிமதி யருளினாலே
நின்றிலங்கி நாத விந்தினிரவிகாப்பு
வலமிடமாய் சூழ்ந்து வருங் காரசாரம்
வழலையெனு மாமது வாணி காப்பு
உலகமதில் கடல் சூழ்ந்த புவனை வாலை
யோங்கார மூல கணபதியே காப்பு
தலமதித சனகாதி ரிஷிகள் பாதஞ்
சடாதார சூக்ஷ்ம சடாதாரங் காப்பாம்"

என்று வள்ளுவர் பாயிரப் பாடல் கூறி முடிப்பாம்! வாழ்க வள்ளுவர் நெறி!

---

## கும்பகோணத்தில் அச்சுக் கலைப் பயிற்சி

### சென்னை அரசாங்கத் திட்டம்

சென்னை, அக். 21—கும்பகோணத்தில் 'களம்காரி' அச்சுக் கலைப் பயிற்சி நிலையம் ஒன்று ஏற்படுத்தும் திட்டத்திற்குச் சென்னை அரசாங்கம் அனுமதி வழங்கியுள்ளது.

இப்பயிற்சி நிலையத்தில் ஆண்டுதோறும் ஐந்து மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படும். பயிற்சி பெறும் ஒவ்வொருவருக்கும் மாதம் தோறும் 25 ரூபாய் உதவிச் சம்பளம் வழங்கப்பட்டு வரும்.

புராணக் கதைகளின் நிகழ்ச்சிகள், கடவுளின் தோற்றங்கள் முதலியவற்றைத் துணிகளால் அழகாக அச்சிடுவதே இந்த 'களம்காரி' அச்சுக்கலையாகும். திருவிழாச் சமயங்களில், தேர்கள், கோவில்கள், மடங்கள் முதலியவை இத்தகைய வேலைப்பாடு அமைந்த துணிகளால் அலங்கரிக்கப்படுகின்றன.

பழங்காலக் கைத்தொழிலான இக்கலை இப்பொழுது மறைந்து வருகிறது. இக்கலையை காப்பாற்றி முறையாக வளர்ப்பதற்கே இப்பொழுது திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. இத்தகைய திட்டத்தை மேற்கொள்ளுமாறு இந்தியக் கைத்தொழில் கழகமே சிபாரிசு செய்தது.

இந்த நிலையத்தை மூன்று ஆண்டுகளுக்கு அரசாங்கமே நடத்தி வரும் முதலில் 1800 ரூபாயும் பிறகு ஆண்டுதோறும் 5600 ரூபாயும் இந்த நிலையத்திற்குச் செலவழிக்கப்படும்.

---

# கோர்ட் விளம்பரங்கள்

## அரியலூர் டி.. மு. கோர்ட்

O. S. 289/57

சைய்யது அப்துல் ராகுப் சாயபு

சைய்யது அப்துல் மன்னன் —வாதிகள்

(1) பரமசிவம், (2) பொன்னுபீபீ என்கிற ஹனியாபீபீ, (3) ரமியா பீபீ, (4) மைனர் பீபீ ஜான், (5) ஸரான் பீபீ, (6) ஸமரா பீபீ, (7) மைனர் சைய்யது அப்துல் ஹன்னன், (8) மைனர் அல் மாஸ் பீபீ —பிரதிவாதிகள்

இறந்த சைய்யது அப்துல் கபூர் சாயபுவுக்கு மூதல் பிரதிவாதியால் 12—2—48-ல் எழுதிக் கொடுக்கப்பட்ட நோட்டின்படி ரூ.868—7—0 கிடைக்க அவருடைய மகன்களான இந்த நம்பர் வாதிகளால் தங்களுக்காகவும் அவருடைய மற்ற வார்ஸ்களான 3 முதல் 8 பிரதிவாதிகளுக்காகவும் இந்த தாவாசெய்து 11—11—57-ல் ஈரங்கி வைத்திருக்கிற விபரம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

R. RAMASWAMI,
Advocate for Plaintiff.

## திருச்சி டிஸ்டிரிக்ட் கோர்ட்

O. P. No. 94/57

அமிர்தவல்லி அம்மாள் 1, மைனர் N. ரங்கனுதன் 2, மைனர் N. கிருஷ்ணன் 3—2 & 3 by Next Friend அமிர்தவல்லியம்மாள் —மனுதார்கள்

N. ராஜகோபாலய்யங்கார் & others —எதிர்மனுதார்கள்

இறந்துபோன, தி. தா. ஸ்ரீரங்கம் 53, கீழ சித்திரவீதி ரங்காச்சாரியார் ஸ்வீகார குமாரர் R. நாராயணய்யங்காரின் துகைகளை வசூலிக்க ஷையாரின் சம்சாரமும் மகன்களுமாகிய மனுதார்கள், தங்களுக்கு வார்சு சர்ட்டிபிகேட் கிடைக்கவேண்டும் என்று ஷை நம்பரில் மனுக் கொடுத்து 8—11—57-ல் ஈரங்கி ஏற்பட்டிருப்பதில் ஆக்ஷேபணையுள்ளவர்கள் அன்று கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

M. V. Krishnaswami Iyengar,
Vakil

## திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 1636/57

A. R. M. A. R. முத்துராமன் செட்டியார் —வாதி

A. K. அசன் —2-ம் பிரதிவாதி

ஷை நம்பர் வாதி கொடுத்த நோட்டீசு:—

வாதி, பிரதிவாதிகள்பேரில் புரோநோட்டுப்படி ரூ. 245 பின் சிலவும் கிடைக்க தாவா துடர்ந்து ஷை தாவா 2-11-57 தேதி விசாரணைக்கு போடப்பட்டிருக்கிறது என்பது இதன் மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

(Sd) M. S. Madhu Iyer,
Advocate for Plaintiff.

## திருச்சி டிஸ்டிரிக்ட் ஜட்ஜ் கோர்ட்

O. P. 95/57

நாகம்மாள் —மனுதார்

29—7—55-ல் பூவாளூரில் காலஞ்சென்ற S. குப்புஸாமி அய்யருக்கு சேரவேண்டிய நிலுவைகள் சம்பந்தமாக பாத்ய சர்ட்டிபிகேட் கொடுக்கவேணுமாக மனுதாரி தாக்கல் செய்துள்ள மனு 8—11—57-ல் விசாரணைக்கு வருகிறதென்று தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது.

M. S. Madhu Iyer,
Advocate for Petitioner.

## திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 1085/57

திருச்சி மலைக்கோட்டை ஸ்ரீ தாயுமானஸ்வாமி கோவிலைச் சேர்ந்த ஸ்ரீ நந்திகேஸ்வரஸ்வாமி சப் கோவில் அதன் எக்ஸிகியூடிவ் ஆபீசர் மூலம் —வாதி

அ. உலகனுத பிள்ளை —பிரதிவாதி

தங்கள் பேரில் குத்தகை பாக்கி ரூ. 106—12—0 கிடைக்கவேணுமாக ஷை தாவா துடர்ந்து ஈரங்கி 18—11—57உ போட்டிருக்கிற சங்கதி அறியவும். அன்று கொர்ட்டில் ஆஜராகி ஆக்ஷேபணையை தெரிவித்துக்கொள்ளலாம்

T. M. வெங்கட்டராமய்யர்,
வக்கீல்.

## துறையூர் டி. மு. கோர்ட்

O. S. No. 528/51

E. A. 626/57

சின்னம்மாள் —வாதி

மைனர்கள் குப்பக் கவுண்டன் 1, ராவணக் கவுண்டன் 2 by கார்டியன் தாயார் நாகம்மாள் —பிரதிவாதிகள்

ஷை நெ. வாதி இந்த நெ. ஈட்டு சொத்துக்கள் ஏலம் போடுவதில், வாதி ஏலம்கேட்கவும், ஏல துகையை டிக்கிரி துகையில் உழவடைத்துக் கொள்ளவும் அனுமதி மனுக் கொடுத்து ஒட்டி சார்வுசெய்ய நோட்டீஸ் ஈரங்கி 30-10-57 தேதி வைக்கப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையை ஷை நெம்பரில் ஷை கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

K. சிவருமகிருஷ்ணய்யர்,
வாதி வக்கீல்.

## In the Court of the Subordinate Judge, Pudukottai

S. C. 125/57

திருமயம் தாலூகா பொன்னமராவதி வட்டம் வலையபட்டியிலிருக்கும் ஏகப்ப செட்டியார் குமாரர் சூம. ஏ. நாகப்ப செட்டியார் —வாதி

P. K. ராமச்சந்தரய்யர் வாதி அட்வகேட்.

ஷை வலையபட்டியில் இருந்து தற்சமயம் மலரயா கோலாலம்பூரில் இருந்துவரும் சுப்பிரமணியன் செட்டியார் மகன் சுப. சோமசுந்தரம்செட்டியார் —பிரதிவாதி

ஷை நெ. பிரதிவாதிக்கு தெரிவிப்பது என்னவென்றால்:— உம்மால் வாதிக்கு 10-1-53ல் எழுதிக்கொடுக்கப்பட்டு இருக்கும் புரோநோட்டின்படி ரூ. 1688—0—0 பின் வட்டி சிலவு கிடைக்க வாதியால் தாவா துடரப்பட்டு ஷை கேசும் புதுக்கோட்டை சப் கோர்ட்டில் 9—11—57 வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஷை தினம் காலை 10-மணிக்கு நீர் சப் கோர்ட்டில் ஆஜராகி உம் கக்ஷிகளை தெரிவித்துக் கொள்ள வேண்டியது இல்லையேல் உம்மை எக்ஸ்பார்ட்டி செய்து கேசை கோர்ட்டார் மேல் நடத்துவார்கள் என்பதை அறியவும்.

P. K. Ramachandra Aiyar,
Advocate for Plaintiff.



Edited and Published by Thiruloka Sitharam for the Shivaji Private Ltd and Printed by A.V.R. Krishnasami at Kannan Press, Tiruchy-2.